# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சார்வரி – சித்திரை, வைகாசி
2020 – ஏப்ரல், மே




சிதம்பரத்தில் கோவிலூர் மடாலயம் நடத்தும் அக்ஷரா மாண்டிசோரிப் பள்ளி
மாணவச் செல்வங்கள் ஆசிரியர்களுடன்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சார்வரி – சித்திரை, வைகாசி
2020 – ஏப்ரல், மே இதழ் – 94, 95

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

**பொருளடக்கம்**



தனி இதழ் ரூ **10.00**
ஆண்டுச் சந்தா ரூ **100.00**

89

உ
சிவமயம்

# இறை வணக்கம்

தேனாறு பாய்கின்ற திருத்தலமாம் கோவி லூரில்
வீற்றிருக்கும் திரிபுவனை என்னும் தேவி
தேடிவந்த அடியவரைக் காத்து நிற்பாள்




வானேறு மதிபோலும் வதனமதி கொண்டாள்
வளர்மதியை முடிக்கணிந்த புவன நாதன்
வாளீசன் விடையேறி வந்த பெம்மான்

ஊனேறு சூலத்தன் மெய்யிலே பாதியாகி
உலகத்தார் தாள்வணங்கக் கோயில் கொண்டாள்
உம்பருக்கும் அருள்வாளாய் உள்ள நங்கை

கானேறு கொன்றையணி கண்ணுதலின் துணையாகிக்
காணுகின்ற கண்ணாளாய்க் காணும் நெல்லை
காலமெலாம் தொழுவார்க்கே அச்சம் இல்லை.

*– காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்*

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

இதுவரை மனித வாழ்வின் நான்கு பருவங்களைப் பார்த்தோம். கல்விப் பருவம் இல்லறப் பருவம், தொண்டுப் பருவம், துறவுப் பருவம் என்கிற நான்கு பருவங்களையும் வாழ்ந்து அனுபவித்த மனிதர்கள் மிகக் குறைவாகவே இருப்பர். பெரும்பாலான மக்கள் முதல் இரண்டு பருவங்களையே தமது காலத்தில் வாழ்ந்து அனுபவத்திருக்கிறார்கள். மூன்றாவது பருவமாகிய தொண்டுப் பருவம் என்ற ஒன்று இருப்பதையே அனேகம் பேர் அறியமாட்டார்கள். என்றென்றும் சம்சார பந்தத்திலேயே அமுந்தி, சுகதுக்கங்களைக் அனுபவித்து தங்கள் வாழ்நாளை கழித்தவர்களே பெரும்பாலானோர்.

மேற்சொன்ன முதல் மூன்று பருவங்களையும் அனுபவித்த சில உத்தம ஜீவன்கள் இருப்பார்கள். துறவறம் என்பது முன்னோர் தவப் பயனும் இப்பிறவியில் செய்த நற்கருமங்களும் உதவினால் ஒழிய துறவு ஏற்பவர்கள் லட்சத்தில் ஒருவர் அல்லது பத்து லட்சத்தில் ஒருவராகத்தான் இருக்கும்.

பணிக்காலத்தில் ஒரு வயத்திற்குப் பின் ஓய்வு எடுக்க வற்புறுத்தப்படுகிறார்கள். அப்போதும் கூட குடும்பப் பாரத்தை ஒதுக்கிப் பிறருக்குத் தொண்டு செய்ய வருபவர்கள் மிகக் குறைவாகவே இருக்கிறார்கள்.

மூன்று பருவங்களையும் முறையாக வாழ்ந்து அனுபவித்து முடித்த பின் பரம்பொருள் அருளாலே துறவறம் ஏற்க வாய்ப்புக் கிடைத்தவர்களில் நாம் ஒருவர்.

கல்விப் பருவத்திலே இயன்ற வரையில் படித்துப் பட்டம் பெற்று ஆசிரியர் பணி ஏற்றும் பின்னர் இல்லற வாழ்விலே முடிந்தவரை

பொருள் ஈட்டி மனைவி, மக்கள், சுற்றம் ஆகியோரை அரவணைத்தும் வாழ்தோம். ஏறக்குறைய நம்முடைய 58 வயதிலிருந்து தொண்டுப் பருவம் தொடங்கியது. 12 ஆண்டுகள் நம்மால் முடிந்த நல்ல காரியங்களை, சேவைகளை, செய்து நல்ல சேவகனாக வாழ்ந்தோம். பின்னர் நம்முடைய 71-ஆவது வயதிலே ஸ்ரீ அருள்மிகு தண்டாயுதபாணி அருளாலும் நாச்சியப்ப சுவாமிகள் இட்ட ஆணையினாலும் 2011-ல் துறவறம் ஏற்று கோவிலூர் ஆதீனம் கோவிலூர் மடாலயத்தின் மடாதிபதியாகப் பொறுப்பேற்றோம். இது நம்முடைய முன்னோர்கள் செய்த புண்ணியத்தின் பலனாகவும் நம்முடைய வாழ்நாளில் யாருக்கும் எந்தக் கெடுதலும் செய்து பாவங்களைச் சேர்த்துக் கொள்ளாத காரணத்தினாலும் மடாதிபதி என்ற உன்னத ஸ்தானம் கைவரப் பெற்றோம்.

வாழ்க்கையில் நல்ல மகனாகவும் நல்ல கணவனாகவும் நல்ல தந்தையாகவும் நல்ல பணியாளராகவும் நல்ல சேவகராகவும் நம்முடைய மூன்று பருவங்களும் கழிந்தன.

துறவின் இலக்கணமான பந்த பாசங்களை ஒதுக்கி அனைத்து ஜீவன்களையும் ஒன்றாகக் கருதிக் கருணை புரிவதும் தொண்டு செய்வதற்கும் முயன்று வருகிறோம். துறவிற்கு இலக்கணமாக மண்,பொன்,பெண் ஆகிய மூன்றையும் நம்மாலே முற்றுமாக ஒதுக்க முடிந்தது; முடிகிறது. பந்தத்தைத் துறந்த நம்மால் பாசத்தைத் துறக்க இயலவில்லை என்பதே உண்மை. துறவு என்பது விரிந்த உறவு என்பது முன்னோர் வாக்கு. இதனை உறுதியாக முழுமையாகக் கடைப்பிடிக்கிறோம். இந்த வளாகத்திலே பணிபுரிகின்ற அனைவரையும் நம்முடைய மக்களாகவும் கற்கின்ற அத்துணை குழந்தைகளையும் நம்முடைய பேரக் குழந்தைகளாகவும் மதிக்கிறோம். எந்த பாரபட்சமும் யாரிடமும் காட்டுவதில்லை.

நம்முடைய பலமும் பலவீனமும் முழுமையாக அறிந்திருக்கிறோம். நம்முடைய கல்வி நிறுவனங்கள் நல்ல படியாக நடக்க வேண்டும், வளர வேண்டும் என்பதே நமக்கு இருக்கின்ற ஆசை.

நம்மடத்தினுடைய தர்ம காரியங்கள் அனைத்தும் செம்மையாக நடைபெற்று மேலும் மேலும் வளர வேண்டும் என்பது நம்முடைய விருப்பம்; ஆசை.

நம்முடைய குருநாதர் தொடங்கி வைத்த கோவில் சார்ந்த கலைகளில் தற்போது நாதஸ்வரம், தவில் மட்டுமே நடந்து வருகின்றன. கல் சிற்பம், மரச் சிற்பம், உலோகச் சிற்பம், உலோக வார்ப்பு, திருமுறை என அனைத்துக் கலைகளும் நடத்த வேண்டும் என்கிற ஆர்வம் மனம் நிறைய இருந்தாலும் மாணவர் சேர்க்கை இல்லாத காரணத்தால் தொடங்க இயலவில்லை. இறைவன் அருளாலே அவற்றையும் கற்பிக்கின்ற வாய்ப்பு ஏற்பட வேண்டும். அனைவரும் நன்கு வாழ்ந்து உயர ஆதிகுரு முதல்வர் கோவிலூர் ஆண்டவர் திருவடி சிந்தித்து வாழ்த்துகிறோம்.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*



# சசிவண்ண போதம்

## நூலாசிரியர் அறிமுகம்

### (சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

சசிவண்ண போதம் என்னும் நூலை இயற்றியவர் தத்துவராய சுவாமிகள் என்னும் ஞானி ஆவார். இவர் இயற்றிய மோகவதைப் பரணியில் ஒரு பிரகரணமாகக் கூறப்பட்டுள்ளது. இந்த நூல்.

இந்த நூல் தத்துவராய சுவாமிகளால் அவர்தம் ஞானாச்சாரியார் ஸ்ரீமத் சொரூபானந்த சுவாமிகளின் அறிவுரைப்படி இயற்றப்பட்டது. இவர் ஏற்கனவே திருவருட்கழல்மாலை, போற்றி மாலை, புகழ்ச்சி மாலை போன்ற சாத்திரங்களை இயற்றி உள்ளார். குருநாதர் இவை யாவும் பண்டிதர்களுக்கு மட்டும் பயன்படும். அவர்களாலே தான் புரிந்துகொள்ள முடியும். மற்ற அதிகாரிகளும் புரிந்துகொள்ளும் வகையில் ஒரு சாத்திரம் செய்து காட்டு என்றாராம். குருவின் சொல்லைத் தலைமேற்கொண்டு ஸ்ரீ ஸீத ஸம்ஹிதை சிவபெருமான் விஷ்ணுபகவானுக்குப் போதித்த முக்திக் காண்டத்தின் ஏழாவது அத்தியாயத்தில் ஞானிக்குப் பணிவிடை செய்வதன் முலம் ஞானம் பெற்ற சசிவண்ணன் சரித்திரத்தை மிக எளிமையாக யாவரும் புரிந்து கொள்ளக் கூடிய விதமாக அமைத்து வேதாந்தக் கருத்துக்களை அடக்கியதாகச் செய்தார். அதனால் அவர் குருமகானும் மகிழ்வுற்றார்.

தத்துவராய சுவாமிகள் மகாஞானி; சிறந்த ஞானம் பெற்றவர். இவருடைய ஜீவ சமாதி எறும்பூரில் உள்ளது. சிதம்பரம் – விருத்தாசலம் சாலையில் சேத்தியாத் தோப்பு என்னும் கிராமத்திற்கு அருகில் உள்ளது, எறும்பூர் கிராமம். தத்துவராயருடைய ஜீவ சமாதியை ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் சின்னாபின்னப்படுத்தி மறைத்து விட்டார்கள். மறைந்து கிடந்த சமாதி சில நூற்றாண்டுகளுக்குப் பிறகு சிதம்பரம் பொன்னம்பல சுவாமிகள் அவர்களுடைய தீவிர முயற்சியால் கண்டுபிடிக்கப்பட்டு, சமாதிக்குத் திருக்கோயில் கட்டினார்கள். பிறகு கோவிலூர் ஆதீனம் எட்டாவது குருமகா சந்நிதானம் ஸ்ரீமத்

சோமசுந்தர சுவாமிகள் காலத்தில் கல் திருப்பணியாகக் கட்டிக் கும்பாபிஷேகம் செய்து வைத்தார்கள். பின்னர் பன்னிரண்டாவது பட்டம் ஸ்ரீமத் நாச்சியப்ப சுவாமிகள் காலத்தில் அத் திருக்கோவிலைப் புதுப்பித்துக் கல் திருப்பணியாகவே திரும்பக் கட்டி 2006 ஆண்டு கும்பாபிஷேகம் செய்து வைத்தார்கள்.

**பின் குறிப்பு :**

(எறும்பூர் அதிஷ்டானக் கோவிலுக்கு அருகில் எறும்பூர் கோ.சித மடாலயம் கட்டி உள்ளார்கள். வருடந்தோறும் ஆடி மாதம் சதய நட்சத்திரத்தில் முறையாகக் குருபூஜை நடந்து வருகிறது. ஏராளமான பக்தர்கள் துறவிகள் கலந்து கொண்டு சிறப்பிப்பார்கள்.

சசிவண்ணனுடைய சமாதியும் அவருடைய சற்குருநாதர் நந்திபாராயணர் அதிஷ்டானத் திருக்கோவிலும் தத்துவராயர் கோவிலிலிருந்து விருத்தாச்சலம் செல்லும் பாதையில் இருபது கிலோமீட்டர் தொலைவில் கோபுரபுரம் என்னும் கிராமத்தில் சத்தியப்பர் ஆலயத்தில் உள்ளன.)

தத்துவராய சுவாமி அவர்கள் வரலாற்றையும் அவர்களுடைய அதிஷ்டானத் திருக்கோயிலைப் பற்றியும் அத்திருக்கோயில் அமையப்பெற்ற எறும்பூரைப் பற்றியும் அத்திருக்கோயிலைக்கட்டிப் பராமரித்துக் கால இடைவெளியின் படி புனருத்தாரணம், கும்பாபிஷேகம் ஆகியவற்றைச் செய்து வருகின்ற கோவிலூர்த் திருமடத்தைப் பற்றியும் இது வரை நாம் பார்த்தோம்.

தத்துவராய சுவாமிகள் நிறைந்த ஞானமும் பண்புடைய குருவிற்காகப் பலதிசைகளிலும் பலவருடங்கள் தேடி அலைந்து பின்னர் ஸ்ரீமத் சொரூபானந்த சுவாமிகளை மீண்டும் பார்த்து, பிரிந்து இருந்த காலத்திலே ஸ்ரீமத் சொரூபானந்த சுவாமிகள் பூரண ஞானம் பெற்றுத் திகழ்வதை அறிந்து அவரையே தம்முடைய குருவாக ஏற்றுக் கொண்டார். அவ்வாறு அரிதாகக் கிடைத்த குருவினுடைய அன்பையும்

ஆசீர்வாதத்தையும் பெறுவதற்காக பல்லாற்றாலும் ஸ்ரீமத் தத்துவராய சுவாமிகள் மிகவும் முயன்றார். குருமகானுடைய மகிழ்ச்சிக்காக அவருடைய விருப்பத்திற்கு ஏற்ப, பல அரிய நூல்களை இயற்றினார். அவை கிழே தரப்பட்டுள்ளன. அந்த நூல்களிலே அனைத்து வேதாந்தக் கருத்துக்களையும் பொதிந்து வைத்து வருங்காலச் சந்ததியினருக்குப் பெரிதும் பயன்தருமாறு செய்து வைத்தார்.

அடங்கன் முறை

பாடுதுறை

பகவத்கீதா மான்மியம்

மார்கழித்திங்கள் பாராயண மஞ்சரி

திருப்பள்ளியெழுச்சி திருவெம்பாவை

திருவடி மாலை

கூர்ம புராணத்திலுள்ள ஈசுவர கீதை

சிவகீதா (ஹிந்தி)

கணேச கீதா (ஹிந்தி)

சசிவந்ந போதம்

அஞ்ஞவதைப்பரணி

பிரம்ம கீதை

மோகவதைப்பரணி

சிவப்பிரகாசமென்னும் தத்வாமிர்தம்

அமிர்தசாரம்

ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் பாடற்றிரட்டு

திருத்தாலாட்டு

கீதாத்திரயம்

திருவடிமாலை திருவருட்கழகன்மாலை

அப்படி இயற்றப்பெற்ற நூல்களிலே நான்கு நூல்கள் கோவிலூர்த் திருமடத்தினுடைய வேதாந்த மரபின் பாடநூல்களாகக் கற்பிக்கப்படுகின்றன. அவையாவன சசிவன்ன போதம்,

அஞ்ஞவதைப்பரணி, ஈசுவர கீதை, பிரம்ம கீதை இவற்றில் முதல் நூலான சசிவன்ன போதம் கோவிலூர்த் திருமடத்தின் வேதாந்த மரபிலே மூன்றாவது நூலாகக் கற்பிக்கப்படுகிறது. இந்நூல் மோகவதைப்பரணி என்னும் நூலின் ஒரு பகுதியாக எழுதப்பட்டுள்ளது. விருத்தாசலபுராணம் என்னும் நூலிலே சூதஸம்ஹிதை என்னும் நூலின் ஒரு பகுதி உள்ளது. அதிலே சொல்லப்பட்ட சசிவன்னன் என்பவனுடைய கதையைச் சொல்வதே இந்நூல்.

தத்துவராய சுவாமிகள் அஞ்ஞவதைப்பரணி, மோகவதைப்பரணி என்று இரண்டு பரணி நூல்களை இயற்றியுள்ளார். வடமொழி, தமிழ் இருமொழி இலக்கியங்களில் அறிஞர்கள் கூறுவது வெஞ்சமரில் ஆயிரம் யானைகளைக் கொன்ற அரசனுக்கோ, வீரனுக்கோ பாராட்டி எழுதப்பட வேண்டிய இலக்கியம் பரணி என்பது மரபு. தத்துவராய சுவாமிகள் எம்முறையாலே பரணி நூல்களை இயற்றினார் என்பது சான்றோர்களின் ஐயம். பல்லாயிரக்கணக்கான மக்களின் (முமூட்சுகளின்) அஞ்ஞானத்தைக் கொன்றவை, இவ்விரு நூல்கள் என்பது வேதாந்திகளின் விளக்கம். இந்த சசிவன்ன போதம் மூன்று முக்கிய குறிக்கோள்களைக் கொண்டு எழுதப்பெற்ற நூல்.

1. எப்படிப்பட்ட அஞ்ஞானியாக இருந்தாலும் ஒரு காலகட்டத்திலே தான் யார், நாம் எதற்காகப் பிறப்பிக்கப் பட்டுள்ளோம் என்று சிந்திக்கத் தொடங்குவானாகில் அவர் குருவின் அருளாலே அஞ்ஞானத்தை விட்டு விலகி ஞானபூமிக்குக் கண்டிப்பாக வரமுடியும் என்பதை முமூட்சுக்களுக்குத் தெரிவிப்பது.

2. எப்படிப்பட்ட பாவச்செயல்களை, கொடூரங்களை, அநியாயங்களை, அடுத்தவர்க்குத் தீங்குகளை செய்த மாபாவிகளுக்கும் குருவின் அருள் கிடைக்கப் பெற்றால் ஞானவழி தோன்றும். அவ்வழி நடந்து பூரண ஞானம் பெற்றுப் பரம்பொருளோடு ஐக்கியம் ஆவது சாத்தியமே.

3. குருவினுடைய பெருமையை விளக்கவும் அவருடைய அருட்பார்வை, தீட்சை, போதனை அனைத்தும் எப்படிப்பட்ட மகாபாவியையும் அஞ்ஞானத்தை நீக்கி ஞானவழி காண்பித்து விடுதலை அடையச் செய்யமுடியும் என்கின்ற குருவின் மேன்மையை யாவரும் அறியப்பறை சாற்றுவது.

இந்நூல் 115 கண்ணிகளாலே இயற்றப்பெற்ற அருமையான செய்திகளைக் கொண்ட எளிய தமிழ்ப் பாடல்களால் ஆன நூல். இந்த நூலிலே இரண்டு பாடல்கள் தொடக்கத்திலும் இறுதியிலும் குருவினுடைய மகிமையை மிக அழகாக, தெளிவாகப் பேசுகின்றன. (3 & 110)

## கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

(முனைவர் அ.சங்கர்தாஸ், தமிழ் உதவிப் பேராசிரியர்,
நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி)

கவிமணியின் பெற்றோர் சிவதாணு பிள்ளை, ஆதிலெட்சுமி, ஊர் நாகர்கோயிலை அடுத்த தேரூர். தமிழ் ஆர்வத்தின் மிகுதியால் இளமையில் இருந்தே தமிழ்க்கவிகள் இயற்றுவதில் ஆற்றல் உடையவராக இருந்தார். தமிழ் நூல்களை முறையாகக் கற்க வேண்டும் என்பது இவரது எண்ணமாக இருந்துள்ளது. இவர் தொடக்கப் பள்ளி ஆசிரியராகப் பணியைத் தொடங்கிக் கல்லூரிப் பேராசிரியர் ஆனவர்.

**படைப்பு :**

கவிதைத் தொகுப்பாக மலரும் மாலையும், மொழிபெயர்ப்பாக உமர்க்கயாம் பாடல்கள், ஆசியஜோதி, நகைச்சுவை எள்ளல் நூல் மருமக்கள் வழி மான்மியம், வரலாற்று நூல் காந்தளூர்ச்சாலை, இசைப் பாடல் தேவியின் கீர்த்தனைகள், நாட்டுப்புறப் பாடல் தீண்டாதார் விண்ணப்பம் என்பதாகும்.

**கவிதை இலக்கணம் :**

மரபுக் கவிதை, புதுக்கவிதை என்றெல்லாம் பகுப்புக் காணப்பட்டாலும் கவிதைக்கு இலக்கணம் தந்தவர் கவிமணி.

*"உள்ளத்தில் உள்ளது கவிதை - இன்ப*
*ஊற்றெடுப்பது கவிதை*
*தெள்ளத் தெளிந்த தமிழில் - உண்மை*
*தெளிந்து உரைப்பது கவிதை"*

என்பதில் தெள்ளத் தெளிந்த தமிழில் தெளிந்து உரைப்பது என்று கூறும்பொழுது தமிழில் தான் தெளிவு, உணர்வு, சுவை, பற்று இருப்பதை அறிய முடிகிறது.

**குழந்தை இலக்கியத்தின் முன்னோடி :**

நாஞ்சில் நாட்டில் 'பாட்டா' என்று எல்லோரும் அன்பாக அழைப்பார்கள். பால்மணம் மாறாப் பச்சிளங் குழந்தைகளும் அவர் பாடல்களைப் பாடி மகிழ்வர். குழந்தைகளிடம் எல்லையற்ற அன்பு சுவரில் இருக்கும் குழந்தைப் படங்களை உயிருள்ள குழந்தைகளாக நினைப்பார். குழந்தைகளுக்காகவே "மலரும் மாலையும்" எழுதினார்.

காரைக்குடி புதுமைப் பதிப்பகத்தார் 1938-இல் வெளியிட்ட மலரும் மாலையும் முகப்பில்,

*"செந்தமிழ் நாட்டுச் சிறுவர் சிறுமியர்க்கு*
*இந்த விருந்தாய் என்றும் வாழ்கவே"*

என்று தன் கைப்பட எழுதிக் கொடுத்ததன்வழி குழந்தை இலக்கியத்தின் முன்னோடி என்பதும் மேலும் பாலைக் கொடுப்பது பசு, குடிப்பது கன்று இந்தக் கொடுப்பினை வினையில் இருவருக்கும் கொள்ளை ஆனந்தம் இதனை,

*"தோட்டத்தில் மேயுது*
*வெள்ளைப்பசு - அங்கு*
*துள்ளிக் குதிக்குது*
*கன்றுக்குட்டி*
*அம்மா என்குது*
*வெள்ளைப்பசு - உடன்*
*அண்டையில் ஓடுது*
*கன்றுக்குட்டி*
*நாவால் நக்குது*
*வெள்ளைப்பசு - பாலை*
*நன்றாய் குடிக்குது*
*கன்றுக்குட்டி*

*முத்தம் கொடுக்குது*
*வெள்ளைப்பசு - மடி*
*முட்டிக்குடிக்குது*
*கன்றுக்குட்டி"*

என்பதில் குழந்தைப்பாடலுக்கு இவர் தந்த உணர்ச்சிப் பாடல் சிறுவர்களின் நாவில் தவழ்ந்து வந்தது என்பது சிறப்பாகும். எளிமையும், இனிமையும் , இவர் பாடல்களில் வந்துள்ளது என்பதை அறியமுடிகிறது.

**புலவர்கள், கவிஞர்கள் பற்றிக் கவிமணி :**

தமிழ் இலக்கியங்கள் தமிழ் மொழியின் வாழ்வியலாக உள்ளது. அந்த இலக்கியங்களை உலகம் வியந்து போற்றும் வகையில் கொடுத்தவர்கள் புலவர்கள், கவிஞர்கள்; அவர்களைக் கவிமணி தன்னுடைய கவிதைகளில் சிறப்பித்துக் கூறுகிறார்.

கம்பனைப்பற்றி,

"*இந்திர சாலமெல்லாம் கவியில்*
*இயற்றிக் காட்டுவார்.*"

"*கவிதை சொல்லக் கேட்டால் உள்ளம்*
*மயங்கச் செய்திடுவார்"*

"*வெய்யிற் கேற்ற நிழலுண்டு*
*வீசுந்தென்றல் காற்றுண்டு கையில் கம்பன் கவியுண்டு"*

என்று தமிழின் சிறப்பாகக் கம்பன் கவியைப் பற்றிக் கூறுகிறார்.

வள்ளுவனை

"*அறிவின் எல்லை கண்டோன் - உலகை*
*அளந்து கணக்கிட்டோன்"*

என்றும்

பாரதியை

"*பாட்டுக் கொரு புலவன் பாரதியடா - அவன்*
*பாட்டைப் பண்ணோடு ஒருவன் பாடினானடா*
*கேட்டுக் கிறுகிறுத்துப் போனேனடா - அந்த*
*கிறுக்கில் உளறு மொழிபொறுப்பாயடா"*

என்று பாரதியைக் கவித்துவம் வாய்ந்து மொழிக்கும் தமிழுக்கும் பெருமை சேர்த்தவன் என்றும் வெளிப்படுத்துகிறார்.

சுந்தரம்பிள்ளையை

*"ஆரா அமுதம் அனைய தமிழ் வளர்த்த பேராசிரியப் பெருமானே"* என்று தமிழ் வளர்த்தவன் என்று குறிப்பிடுகிறார்.

ஔவையை

*"ஔவைக் கிழவி நம் கிழவி*
*அமுதின் இனிய சொற்கிழவி*
*செவ்வை நெறிகள் பற்பலவும்*
*தெரியக்காட்டும் பழங்கிழவி"*

என்று அமுதாகச் சொல்லக்கூடிய கிழவி என்று சிறப்பித்துக் கூறுகிறார்.

**இலக்கியங்களின் தன்மை :**

*"தேனிலே ஊறிய செந்தமிழின் – சுவை*
*தேரும் சிலப்பதிகாரம் என்று சிலம்பையும்"*
*"கற்றவர் மெச்சும் கலித்தொகையாம் – இன்பக்*
*கற்பனை சேருங் களஞ்சியத்தை"* – என்று கலித்தொகையையும்

*"பண்டை இயற்கை வளங்களை யெல்லாம் – பத்துப்*
*பாட்டின் வளத்தினிற் கண்டறிந்து*
*மண்டல மெங்கும் கமழும் அருந்தமிழ்*
*வாசம் நுகர்ந்து மகிழ்வோமே"*

என்று தமிழின் சிறப்பையும் மொழியின் வளத்தையும் உலகிற்கு எடுத்துக் கூறிய இலக்கியங்களை நாம் அறிய வேண்டும் என்பதற்காகக் கவிதை மூலம் வெளிப்படுத்துகிறார்.

**தெய்வத் தமிழ்ப்பற்று :**

சைவ சமயத்தின் மீது அதிகப் பற்று உடையவராகக் காணப்பட்டுகிறார். அதன் வெளிப்பாடாக சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் போன்றோரை எடுத்துக் கூறுகிறார். இறைவனை எங்கு தேடியும் காண முடியவில்லை என்பதை

*"கோயில் முழுதும் கண்டேன் – உயர்*
*கோபுரம் ஏறிக்கண்டேன்*

*தேவாதி தேவனை - தோழி*

*தேடியும் கண்டிலனே"*

என்று பெண் பாடுவது போல் பாடியுள்ளார்.

**மருமக்கள் வழி மான்மியம் :**

நாஞ்சில் நாட்டு மக்களின் வாழ்க்கை நிகழ்வுகளை நகைச்சுவை உணர்வுடன் கூடியது இந்நூல்; பெண்ணுக்குச் சொத்துரிமை வருவதற்கு ஓர் அடித்தளமாக இருந்து சமுதாய மாற்றத்தைத் தன் எளிமையான, தமிழின் தன்மையால் இந்நூலில் காணப்படும் தலைவி ஐந்தாவது மனைவியாகி

*"கணவர் வீட்டுக் கதை கேளும்*
*மனைவியர் வேலை வகையினைக் கேளும்*
*தொழுவத்துச் சாணம் வழிக்க ஒருத்தி*
*தொட்டித் தண்ணீர் சுமக்க ஒருத்தி*
*அடுக்களைச் சமையல் ஆக்க ஒருத்தி*
*அண்டையில் அகலா திருக்க ஒருத்தி*
*அத்தனை பேர்க்கும் அடிமையாளாய்*
*ஏழைப்பாவி யானும் ஒருத்தி*
*எளியோன் சென்ற நாள் முதலாக*
*எல்லா வேலையும் என்தலை மேலாம்*
*பெண்டிர் நால்வரும் பென்சன் பெற்றனர்"*

என்பதில் வேலைப்பளு, வறுமையால் ஏற்பட்ட இப்படிப்பட்ட வாழ்க்கை என்பதை எளிமையான தமிழில் கவிமணி வெளிப்படுத்தியிருப்பதில் தமிழ்மொழியின் பற்றை அறியமுடிகிறது.

**மொழி பெயர்ப்புகள் :**

பாரசீக மொழியில் உமரின் நாலடிச் செய்யுளாக ருபாய்த் நூலாகும். ஃபிவிட் ஜீரால்ட் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்ததைத் தமிழில் இது வேண்டும் என்ற பற்றுடன் தமிழ்ப்படுத்தினார் கவிமணி. அவற்றில் எது சொர்க்கம், சுகம், இன்பம், தமிழ்த்தாகம் என்பதை

*" இல்லாப் பொருளுக் கேங்காமல்*

*இருக்கும் பொருளும் எண்ணாமல்*

*எல்லாம் வல்ல எம் பெருமான்*

*இரங்கி அளக்கும் படிவாங்கி*

*நல்லார் அறிஞர் நட்பையும் நீ*
*நாளும் நாளும் நாடுவையேல்*
*நில்லா உலகில் நிலைத்த சுகம்*
*நீண்டு வளரும் நிச்சயமே "*

என்று சுகத்தைத் தமிழ் வழி வெளிப்படுத்துவது சிறப்பானதாகும்.

**ஆசிய ஜோதி :**

எட்வின் அர்னால்டு எழுதிய லைட் ஆப்ஏஷியா என்ற புத்த வரலாற்று நூல் தமிழின் பெருமைக்கு வேண்டும், தமிழ்ச் சான்றோரும் சமுதாயத்திற்குத் தேவை என்பதாகும். தமிழின் பற்றாலும் ஆசிய ஜோதி என்று மொழிபெயர்த்தார். இவற்றில் உயிர்ப்பலி ஆகாது என்பதை,

*"பாரில் உதிரம் குளிப்பதனால் - ஒரு*
*பாவமும் நீங்குவதில்லை ஐயா*
*சீரிய தேவரும் இச்செயல் - கண்டுதம்*
*சிந்தை களித்திட மாட்டாரையா "*

என்று கூறுகிறார்.

**கவிமணி ஒரு வாழ்த்துக் கவி :**

வாழ்த்துப்பாக்கள், இரங்கற்பாக்கள், கீர்த்தனங்கள் போன்றவை பாடிப் பெருமைப்படுத்தியவர். செய்குத்தம்பிப் பாவலர், ஆறுமுக நாவலர், நாமக்கல் கவிஞர், போன்றோர்களை வாழ்த்திப் பாடியுள்ளார்.

டி.கே.சி, அண்ணாமலை மன்னர், இராஜாஜி, சொ. முருகப்பா, ஆர்.கே. சண்முகம் செட்டியார் போன்ற நகரத்தார்கள் தமிழ் வளர்த்தார்கள். மொழியின் பெருமையை உலகறியச் செய்தவர்கள். இவர்களைப் பற்றிப் பாடிச் சிறப்பித்துள்ளது தமிழின் பற்றின் காரணமாகத்தான் என்பதில் ஐயமில்லை.

**தமிழ்ப்பற்று :**

தமிழே உயிர்மொழி, உயர்வு மொழி, செம்மொழி என்று உயர்வாகச் சொல்லியவர் கவிமணி. மொழிப் பற்றாளன் தான் உணர்வுமிகு இலக்கியங்களைப் படைக்க முடியும். பெருமையை உணர்த்த முடியும் அதனை,

"*செந்தமிழ் நாட்டில் - முதன் மொழி*
*செவியிற் சேருமுன்னே*
*அந்தமில்லாமல் - உள்ளத்தில்*
*அமுதம் ஊறுதடா* "

என்று செவிக்குச் சேருமுன்னே உள்ளத்தில் அமுதமாக உள்ளது என்று கூறுவது தமிழ்ப்பற்றினைப் பறைசாற்றுகிறது.

அவருடைய உள்ளம் பேச்சு செயல் எல்லாம் அன்பு ஆளுமையின் வெளிப்பாடு இதனை,

"*பாலைவனம் சோலை வனமாக வேண்டும்*
*பசுங்கிளிகள் அங்கிருந்து பாடவேண்டும்*
*சாலைகளிற் பல தொழிலும் பெருக வேண்டும்*
*சபைகளிலே தமிழெழுந்து முழங்க வேண்டும்* "

என்று தன் தமிழ் உணர்வையும், அதன்மீது கொண்ட தீராத காதல் பற்று என்பதையும், சபைகளில் தமிழ் எழுந்து முழங்க வேண்டும் என்பதில் வெளிப்படுத்துவது போற்றுதற்குரியதாகும்.

முடிவுரை :

கவிமணி பாடல்கள் கற்றவர்களையும், கல்லாதவர்களையும் கனிந்து உருக வைக்கும். பாட்டாளியைப் பரவசமூட்டும், ஏழை மக்களுக்கு இன்பத்தை நல்கும், குழந்தைகளை ஆடிப்பாடச் செய்யும், புலவன் கவிஞனையும் பெருமைப்படுத்தும், தமிழ்ப்பற்றாளர்களை, பற்றினை வெளிப்படுத்தும், வெளிநாட்டு இலக்கியங்கள் தமிழ்ப்படுத்தும், பெண்ணைப் போற்றும், படித்தாலும், படிக்கப் பக்கம் நின்று கேட்டாலும் அத்தனையும் தித்திக்கும் அரிய சுவை பொருந்தியதாக உள்ளவை.

பாரதி என்ற கவிதை விதை பூமியில் பதிந்து கன்றாக முளைத்து வளர்ந்து, ஓங்கிய மரமாகப் பாரதிதாசன் திகழ பூ, காய் என்று கவிஞர்கள் அழகு சேர்க்கக் கனியாக இருந்து சுவை கொடுத்துக் கொண்டிருக்கின்றவர் கவிமணி என்பதில் சிறப்பும், போற்றுதற்கும் உரியது.

## தமிழாளி! தமிழ்ச்செம்மல் அய்க்கண் தானே!

(தமிழாகரர் தெ. முருகசாமி, புதுச்சேரி)

படைப்பாளி! படிப்பாளி! பசுந்த மிழ்க்காம்
பங்காளி! பண்பாளி! பைந்த மிழ்க்குக்
கொடையாளி! விருதாளி! கோபம் இல்லாக்
கொஞ்சுதமிழ்ப் பேச்சாளி! நாளும் சீரார்
நடையாளி! நற்றமிழ்சேர் வித்த கத்தின்
நயமான நட்பாளி! தண்ட மிழ்க்குத்
தடையாளி யானவரைத் தட்டிக் கேட்கும்
தமிழாளி! தமிழ்ச்செம்மல் அய்க்கண் தானே!

திருப்புத்தூர்க் கல்லூரிப் பேரா சானாய்த்
திகழ்ந்திட்ட போதந்தோ தீராக் காதல்
விருப்பாலே தீந்தமிழில் பல்லாற் றானும்
விறுவிறுப்பாய்ப் படைத்தளித்தார் நூல்கள் தம்மை!
இருப்பான தமிழகத்தின் ஆட்சி யாளர்,
இருந்தமிழ்நற் சார்புடைய சங்கத் தார்கள்
விருப்பமுடன் அளித்தார்கள் பாராட் டெல்லாம்
விண்முட்ட விஞ்சினவே புகழுந் தானே!

நாட்டாராம் அம்பலமாம் மக்கள் தம்மை
நன்னிலையில் உயர்த்துதற்குப் பாடு பட்டார்!
தீட்டாத தீந்தமிழின் ஏடும் உண்டோ?
தினந்தினமும் எழுத்தாலே வாழ்ந்து வந்தார்
வீட்டாளாம் வசந்தாவாம் இல்லத் தாளின்
விடுதலைக்குப் பின்னரவர் ஓய்ந்து விட்டார்!
பாட்டாலே அவர்வாழ்வைப் பாடு தற்குப்
பரந்துபட்ட அவர்பெருமை வரலா றன்றோ!

குன்றக்குடி நந்தவனக் கூட்டம் என்றால்
குன்றக்குடி அடிகளவர் தந்த அந்த
என்றுமுயர் நற்கதையாம் நம்பி யாக
எல்லோர்க்கும் முன்னாலே வந்தி ருப்பார்!
மன்றுபுகழ் கோவிலூராம் ஆதீ னத்தார்
மதித்திடும் நல் மானுடத்தின் நேயம் மிக்கார்!
என்றும்தமிழ் எழுத்தாளர் சங்கத் தேரை
எல்லோரும் பாராட்ட ஓட்டிச் சென்றார்!

காரைக்குடி பேர் சொல்லும் கம்ப னுக்காம்
கழகத்தின் செயலாள ராகத் தக்கார்
யாரையுமே அழைத்துவந்து வீறு சேர்க்கும்
யதார்த்தத்தின் பொறுப்பாலே நல்ல வண்ணம்
பேரைத்தான் சேர்த்ததுடன் ஆண்டு தோறும்
பெரிதான புத்தகத்திரு விழாவைச் செய்தே
ஊரைத்தான் நாட்டைத்தான் படிக்க வைத்தார்!
உத்தமராம் பச்சைத்தமிழ் அய்க்கண் தானே!

எங்களதாம் இராமசாமி தமிழ்க்கல் லூரி
எந்தவிழா வானாலும் வந்து வாழ்த்தும்
சிங்கமவர்! இந்துமத அபிமா னம்சேர்
சிங்காரச் சங்கத்தின் பொறுப்பும் ஏற்றே
எங்குமுள தமிழமைப்பின் நிகழ்விற் கெல்லாம்
எளிமையுடன் கலந்து கொண்டு வாழ்த்துச் சொல்லும்
தங்ககுண அய்யாவாம் அய்க்கண் என்னும்
தகையாளர் மறைந்ததினால் தவிக்கின் றோமே!

அன்னார்தாம் நம்மோடே இருப்பார் போல
அருகுவந்தே நம்மிடத்தில் சொல்வா ராக
மின்னார்ந்த வாழ்க்கையிது! சேர்த்த எல்லாம்
மிடுக்காக இருந்ததுபோல் மெலிந்து போகும்!
எந்நாளும் இறப்புவரும்! ஆத லாலே
எதிர்காலம் என்றெதையும் தள்ள வேண்டாம்!
இந்நாளே நல்லதொன்றைச் செய்து விட்டால்
இறப்பாலே பிறந்தகடன் தீரு மன்றோ!

வாழி! அவர்புகழ்! அய்க்கண் எழுத்தெல்லாம்
சூழிய மெய்க் கண்ணாய் மேதினியில் - ஊழி
உளதமிழ்போல் அய்க்கணும் வாழ்வார்! உலகோர்
உளத்துள் உறைவார் உவந்து!

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### சுற்றம் தழால்

(மன்னன் தன்னுடைய சுற்றத்தைத் தழுவிக் கொள்ளுதல்)

**1. பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்**
**சுற்றத்தார் கண்ணே உள.**

பற்றற்ற கண்ணும் - தம் சுற்றத்தார் உறவு நீங்கிய போதும்; பழைமை பாராட்டுதல் - அவர் கொண்டிருந்த பழைய நினைவுகளைப் பாராட்டுதல்; சுற்றத்தார் கண்ணே உள - சுற்றத்தாரிடம் மட்டுமே உள்ளனவாகும்.

சுற்றத்தார் உறவு நீங்கிய போதும் அவர் கொண்டிருந்த பழைய நினைவுகளைப் பாராட்டும் நிலை சுற்றத்தாரிடம் மட்டுமே உள்ளனவாகும்.

**2. விருப்பு அறாச் சுற்றம் இயையின் அருப்புஅறா**
**ஆக்கம் பலவும் தரும்.**

விருப்பு அறாச் சுற்றம் இயையின் - அன்பு நீங்காத சுற்றம் அமைந்து விடுமானால்; அருப்பு அறா ஆக்கம் - தோன்றுதல் நீங்காத செல்வம்; பலவும் தரும் - பலவற்றையும் தரும்.

அன்பு நீங்காத சுற்றம் அமைந்து விடுமானால் அது தோன்றுதல் நீங்காத செல்வம் பலவற்றையும் தரும்.

அருப்பு – அரும்பு என்பதன் வலித்தல் விகாரம்.

**3. அளவளாவு இல்லாதான் வாழ்க்கை குளவளாக்**
**கோடுஇன்றி நீர்நிறைந் தற்று.**

அளவளாவு இல்லாதான் வாழ்க்கை – நெஞ்சு கலத்தலாகிய பண்பில்லாதவன் வாழ்க்கை; குளவளாக் கோடு இன்றி – குளத்தின் பரப்பைச் சுற்றிக் கரையில்லாமல்; நீர்நிறைந் தற்று – அக்குளத்தில் நீர் நிறைந்ததைப் போல் ஆகும்.

நெஞ்சு கலத்தலாகிய பண்பில்லாதவன் வாழ்க்கை குளத்தின் பரப்பைச் சுற்றிக் கரையில்லாமல் அக்குளத்தில் நீர் நிறைந்ததைப் போல் ஆகும்.

கரையில்லாத குளத்தில் நீர் நிறைந்தால் அது தங்காது வீணாவது போல் சுற்றமில்லாதவன் வாழ்க்கை இருப்பது போல் தோன்றி இல்லாது போய்விடும்.

**4. சுற்றத்தால் சுற்றப் படஒழுகல் செல்வம்தான்**
**பெற்றத்தாற் பெற்ற பயன்.**

சுற்றத்தால் – சுற்றத்தினரால்; சுற்றப் படஒழுகல் – சுற்றப்படும் படியாக அவர்களைத் தழுவி வாழுதல்; செல்வம் தான் பெற்றத்தால் – தான் செல்வத்தைப் பெற்றதனால்; பெற்றபயன் – பெற்ற பயன் ஆகும்.

ஒருவன் பெற்ற செல்வத்தால் பெற்ற பயன் தன் சுற்றத்தினரால் சூழப்படும் படியாக வாழுதலே ஆகும்.

பெற்றத்தால் – பெற்றதால் என்பது எதுகை நோக்கி வந்தது.

**5. கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் அடுக்கிய**
**சுற்றத்தால் சுற்றப் படும்.**

கொடுத்தலும் – தன் சுற்றத்திற்கு வேண்டுவன கொடுத்தலும்; இன்சொலும் ஆற்றின் – இன்சொல் சொல்லுதலையும் செய்தால்; அடுக்கிய சுற்றத்தால் – பலவகைச் சுற்றத்தினரால்; சுற்றப்படும் – சூழப்படுவான்.

ஒருவன் தன் சுற்றத்திற்கு வேண்டுவனவற்றைக் கொடுத்தலும்

அவரிடத்தில் இன்சொல் சொல்லுதலையும் செய்தால் அவன் பல சுற்றத்தாரால் சூழப்படுவான்.

**6. பெருங்கொடையான் பேணான் வெகுளி அவனின்**
**மருங்குடையார் மாநிலத்து இல்.**

பெருங்கொடையான் - மிகுந்த கொடை உடையவன்; பேணான் வெகுளி - வெகுளியை விரும்பாதவன்; அவனின் மருங்குடையார் - அவனைப் போலச் சுற்றத்தை உடையவர்கள்; மாநிலத்து இல் - இந்த உலகத்தில் இல்லை.

மிகுந்த கொடை உடையவனும் வெகுளியை விரும்பாதவனுமாக ஒருவன் இருந்தால் அவனைப் போலச் சுற்றத்தை உடையவர்கள் இவ்வுலகில் இல்லை.

**7. காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்**
**அன்னநீ ரார்க்கே உள.**

காக்கை கரவா - காக்கை தனக்கு இரை கிடைத்தபோது மறைக்காமல்; கரைந்துண்ணும் - தன் இனத்தை அழைத்து அதனோடு உண்ணும்; ஆக்கமும் அன்ன நீரார்க்கே உள - அத்தன்மையைக் கொண்டோருக்கே ஆக்கமும் உள்ளதாகும்.

காக்கை தனக்கு இரை கிடைத்த போது தன் இனத்தையும் அழைத்து அதனோடு உண்ணும்; அது போன்ற தன்மை கொண்டோருக்கே ஆக்கமும் உளவாகும்.

கரவா - ஈறு கெட்ட எதிர்மறை வினை எச்சம்

**8. பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்**
**அதுநோக்கி வாழ்வார் பலர்.**

பொதுநோக்கான் - பொதுவாக எல்லோரையும் நோக்காமல்; வேந்தன் வரிசையா நோக்கின் - அரசன் அந்தந்த வரிசையில் எல்லோரையும் நோக்கினால்; அதுநோக்கி - அச்சிறப்பினை நோக்கி; வாழ்வார் பலர் - சுற்றமாக வாழ்பவர் பலராவர்.

அரசன் எல்லோரையும் பொதுவாக நோக்காமல் வரிசை அறிந்து நோக்குவானாயின் அவனது சிறப்பினை நோக்கிச் சுற்றமாக வாழ்பவர் பலராவர்.

நோக்கான் – எதிர்மறை எச்சம்; நோக்கின் – வினை எச்சம்.

**9. தமர்ஆகித் தன்துறந்தார் சுற்றம் அமராமைக்**
**காரணம் இன்றி வரும்.**

தமர்ஆகித் – தம்முடைய சுற்றமாகி இருந்து; தன்துறந்தார் சுற்றம் – தம்மைத் துறந்தார் சுற்றமாகிக் கொள்ளுதல்; அமராமைக் காரணம் இன்றி வரும் – பொருந்தும் காரணம் இன்றி வரும்.

தம்முடைய சுற்றமாய் இருந்து பின்பு பிரிந்து சென்றவர் மீண்டும் சுற்றமாதல் பொருந்தும் காரணம் இன்றி வரும்.

தன்துறந்தார் – இரண்டாம் வேற்றுமைத் தொகை.

**10. உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்**
**இழைத்திருந்து எண்ணிக் கொளல்.**

உழைப்பிரிந்து – தன்பக்கம் இருந்து பிரிந்து; காரணத்தின் வந்தானை – ஏதோ காரணமாகத் திரும்ப வந்தவனை; வேந்தன் இழைத்திருந்து – வேந்தன் காரணத்தை அறிந்து; எண்ணிக் கொளல் – ஆராய்ந்து ஏற்றுக் கொள்ள வேண்டும்.

தன்பக்கம் இருந்து பிரிந்து ஏதோ காரணமாகத் திரும்பி வந்தால் அவனது காரணத்தை அறிந்து ஆராய்ந்து அவனை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

காரணத்தின் – இன் ஏதுப் பொருள்.

***(தொடரும்...)***

---

நமது கோவிலூர் மடாலயத்துடனும் வணக்கத்திற்குரிய

சுவாமிகளுடனும் தொடர்பும் பற்றுதலும் கொண்ட

எழுத்தாளர் நற்கதை நம்பி கலைமாமணி பேராசிரியர்

முனைவர். அய்க்கண் அவர்கள் 11.04.2020 அன்று

இயற்கை எய்தினார் என்பதை ஆழ்ந்த வருத்தத்துடன்

தெரிவித்துக் கொள்கிறோம்.

## யார் கொலோ சதுரர்? (தொடர்ச்சி)

(திருஅருட்பா - நான்காம் திருமுறையின் அருட்பிரகாசமாலை பற்றிய ஓர் அழகியல் திறனாய்வு)

பேராசிரியர். மு. பழனி இராகுலதாசன்

ஒவ்வொரு பாடலும் நயம் நயமான சித்திரங்களே. முன்னரே நாம் குறிப்பிட்டுக் கொண்டது போல அனைத்தும் ஓரங்க நாடகங்களே. இறைவன் வருகை, அடைத்துள்ள கதவைத் திறத்தல், ஓர் அரிய பொருளை வற்புறுத்திக் கொடுத்தல், சென்று விடுதல் என்பன நடைபெறும் நிகழ்வுகள் ஆகும்.

இவை அனைத்தும், இராமலிங்கர் என்ற பக்திக் கவிஞர் மூலமாக நூறு கவிதைகளாக அமைகின்றன ; எனவே அடைமொழிகள் எதுகை அழகுக்காக வித்தியாசமான சொற்பிரயோகங்கள், ஆழமான உருக்காட்சிகள் எனக் கவிதைகள் விரிவாகவே அமைகின்றன ; சில உதாரணங்களைக் காண்போம்.

"வேத உச்சியெல்லாம் மெச்சுகிற மலரடிகள்", "கன்மயமும் கனிவிக்கும் திருவடிகள்", "சிலம்பணிந்து அம்பலத்தே தனிநடம் செய்து அருளும் அடித்தாமரைகள்", "புண்ணியர்தம் மனக் கோயில் புகுந்து அமர்ந்து விளங்கும் பொன்மலர்ச் சேவடி", "கற்றவர்தம் கருத்தினில் முக்கனிரசம் போல் இனிக்கும் கழலடிகள்", "கருணை வடிவாய் அடியார் உள்ளகத்தே, அமர்ந்த கழலடிகள்", "உள்ளுருகும் தருணத்தே ஒளிகாட்டி விளங்கும் உயர்மலர்ச் சேவடி", "அருள் விளங்கும் உள்ளகத்தே அதுவாய் விளங்கும் அணிமலர்ச் சேவடி", "எனக்கு நன்மை தீமை என்பது இரண்டும் ஒத்த இடத்தே, இரண்டும் ஒத்துத் தோன்றுகிற எழிற்பதங்கள்", "யோகமலர்த் திருவடிகள்", "சின்மயமாய் விளங்குகின்ற திருவடிகள்", "பொக்கமிலாப் பழந்தனிலே தெள்ளமுதம் கலந்தாற்போல் கலந்து தித்திக்கும் பொன்னடிகள்", "ஒரு நாள் வஞ்சனேன் புன்தலையில் வைத்திடவும் சிவந்து வருந்திய சேவடி பின்னும் வருந்திட...", "மெலிவனைத்தும் தவிர்க்கும் துணையடிகள்.." - இப்படி, இறைவனின் பொன்னடிகளை வருணித்து,

அப்பொன்னடிகள் வருந்துமாறு, நோகுமாறு நடை பயின்று இறைவன் வந்தான் என்று இராமலிங்கர் வருணனை செய்கிறார்.

அடுத்து, இறைவன் வருகின்ற நேரம், ரகசியப் பொருள் ஒன்றைக் கொடுக்க ரகசியமாய்த் தானே வர வேண்டும். இறைவன் வருகின்ற நேரத்தை இராமலிங்கர் அப்படித்தான் மிக மிக மென்மையாக வருணிக்கிறார்.

"இரவில், எளியேன் இருக்கும் இடம்தேடி" ; "ஒருநாள் அன்று இரவில்", "இருள்நிறைந்த இரவில்" ; "நள்ளிரவில் மிக நடந்து" ; "கங்குலிலே நடந்து", "பகல்ஒழிய நடு இரவில் நடந்து", "கண்டவரும் காணாத நடு இரவுதனில்", "பொருள் விளங்கா நடு இரவில்", "பாதி இரவிடை நடந்து", - என்றெல்லாம் இறைவன் யாருக்கும் தெரியாமல் இரவுப் பொழுதில் வந்தனன் என்று பாடிச் செல்கிறார் இராமலிங்கர்.

அழகும் இலக்கியச் சுவையும் நிரம்பிய இந்த ஓரங்க நாடகத்தில் அடுத்து நம் கவனத்தை ஈர்க்கும் காட்சி, இறைவன் வந்து கதவு திறக்கும் காட்சி. அடைத்திருக்கும் கதவை இறைவனே தட்டித் திறக்கிறான். இறைவன் தட்ட, வள்ளலார் கதவைத் திறக்கிறார் என்று நாம் புரிந்து கொள்கிறோம். வருவதும், வந்து கதவம் தட்டுவதும், கதவம் திறப்பதுமான அந்த இரவு நேரக் காட்சியை இராமலிங்கர் மிக மிக இனிய சொற்களால் வருணிக்கிறார்.

யாரும் அறியக் கூடாத திருட்டுத்தனமான சந்திப்பு அல்லவா ! "கலகமிலாத் தெருக்கதவம் காப்பவிழ்க்கப் புரிந்து", என்றும், "நடு இரவில் கதவம் திறப்பித்து" என்றும், "மனைக் கதவம் திறப்பித்து", என்றும் "எழிற் கதவம் திறப்பித்து" என்றும் தேடிப் பெருங்கதவம் திறப்பித்து" என்றும், "கதவுதனைக் காப்பவிழ்க்கப் புரிந்து" என்றும் ஒவ்வொரு பாடலிலும் கதவு திறக்கும் காட்சியை இராமலிங்கர் வருணிக்கிறார். "திறப்பித்து" என்ற பிறவினைச் சொல்லால் கதவை மெல்லத் தட்டித் திறக்கச் செய்தான் இறைவன் ; வள்ளலார் கதவு திறந்தார் என்று புரிந்து கொள்கிறோம்.

இனி என்ன ? இரவு நேரம் ; தலைவனாகிய இறைவன் வந்து, கதவைத் தட்டி, கதவும் திறக்கப்பட்டுவிட்டது. தலைவனாகிய

இறைவனும், தலைவியாகிய இராமலிங்கரும் பேச வேண்டியது தானே!

இறைவன்தான் இராமலிங்கரை அழைக்கிறான். அவனது இனிய அழைப்பை இராமலிங்கர் பாடல்கள் அனைத்திலும் குழைந்து குழைந்து எழுதுகிறார்.

“கனிந்து, எனை அங்கு அழைத்து”, “களித்து எனை அங்கு அழைத்து”, “மகிழ்ந்து எனை அழைத்து”, “கடையேனை அழைத்து”,“வலிந்து அழைத்து”, “அன்போடு எனை அழைத்து”, “பரிந்து அழைத்து”, “விரும்பி எனைக் கூவி”, “கூவி வரவழைத்து”, “சிறியேனை அழைத்து”, “என்னை இனிது அழைத்து”... என்று இறைவன் அழைத்த அன்புப் பாங்கினை இராமலிங்கர் ஒவ்வொரு பாடலிலும் எழுதுகிறார்.

இறைவன் கதவு திறந்து வந்துவிட்டான் ; அன்போடு அழைக்கிறான்; அடுத்த காட்சி கொண்டு வந்த பொருளைக் கொடுக்கின்ற காட்சி ; அதற்கேற்றவாறு உணர்வுபூர்வமான வருணனைகள் ; தயங்கியவாறு இராமலிங்கர் மறுக்கும் இடம்; ஆனாலும் இறைவன் வற்புறுத்தி உள்ளங்கைக்குள் வைத்துவிடும் வருணனை என்று நாடகக் காட்சி ஒவ்வொரு பாடலிலும் இடம் பெறுகிறது.

“எனது கையில் ஒன்று கொடுத்தாய்” ; “மகனே, வருந்தாதே, இங்கு இதனை வாங்கிக்கொள், என்ன, சிறியேன் மறுப்ப, மறித்தும் வலிந்து எனது ஒரு கையில் கொடுத்து, இங்கே உறைதி என்று மறைந்தாய்”, “களிப்பொடு வாங்கு என, எனது கையிலே கொடுத்து” ; “மயங்காதே, இங்கு இதனை வாங்கிக்கொள்”; “வாங்கிக் கொண்டு மகனே, விளையாடி வாழ்க என உரைத்தாய்”; “வாங்கு இதனை என்று தருநாளில், யான் மறுப்ப, மறித்தும் வலிந்து எனது தடங்கைதனில் கொடுத்து”; கடையேனை அழைத்து, எனது கையில் ஒன்று கொடுத்து”, “மகனே, இங்கு இதனைத் தாங்குக என்று எனது தடங்கைதனில் கொடுத்து..”, “அழைத்து, என் கைதனிலே தூய ஒன்றை அளித்து”, “திருமேனி காட்டி, புலையேன் கையில் பொருந்த ஒன்று வைத்து”; “வாங்கு என என் கரத்தே சித்தம் மகிழ்ந்து

அளித்தனை" ; "கரத்தே, பொருந்த ஒன்று கொடுத்தனை", – என்றவாறு இறைவன் இராமலிங்கரிடம் "வாங்கு, வாங்கிக்கொள்" என்று உரிமையுடன் வற்புறுத்தி வற்புறுத்தித் தருவதாகவே நூறு பாடல்களிலும் வருணனை தொடர்ந்து இடம்பெறக் காண்கின்றோம்.

வற்புறுத்தி ஒரு பொருளை இராமலிங்கரின் கையில் கொடுப்பதோடு காட்சி அமைப்பு முடிந்து விடவில்லை. கொடுக்கும் வேளையில் இறைவன் பேசும் அன்புப் பேச்சுக்கள், உரிமைப் பேச்சுக்கள் வாழ்த்திய வாழ்த்துரைகள் நம் கவனத்தை ஈர்க்கின்றன.

"இங்கு உறைக மகிழ்ந்து" ; "வாங்கிக் கொண்டு, மகனே, நீ விளையாடி வாழ்க"; "பண்பொடு வாழ்ந்திடுக"; "மயக்கமுறேல் மகனே, மகிழ்ந்து உறைக"; "இன்று முதல் ஒன்றும் அஞ்சேல்"; "களித்து உறைக"; "இனிமயங்காதே, என் மகனே, மகிழ்வோடு இருத்தி" ; "இனி, நீ, சிறிதும் அஞ்சேல், இங்கு, மாதானத்தவர் சூழ வாழ்க" ; "பெருமையிலே நீ பிறங்குக" ; "மற்றவர் போல் மயங்கேல், மகனே, மகிழ்ந்து திருவருள் வழியே வாழ்க" ; "மகிழ்ந்து, இங்கே தங்குக" ; "என் மகனே வாழ்க" ; "குறைவற வாழ்க" ; "இன்று முதல் மிக மகிழ்க"; "துயர்தீர்ந்து வாழ்க!" ; "துயரமெலாம் விடுக, இது தொடுக" ; "பிடி, நாளும் மகிழ்ந்து, மனம் கொண்ட படியே பேரறம் செய்து உறுக" ; "இன்னும் நெடுங்காலம் புலவர் தொழ வாழ்க" என்றெல்லாம் இறைவன் இராமலிங்கரை வாழ்த்தி, வாழ்த்தி உரை செய்கிறான்.

இரவு நேரத்தில் வந்தான் ; கதவைத் திறந்தான் ; கையில் ஒரு பொருள் கொடுத்தான் ; கொடுக்கும் போதே வாழ்த்துகிறான் ; ஆனால் என்ன கொடுத்தான் என்பது வெளிப்படையாகச் சொல்லப்படவில்லை ; ஆனாலும் பொருள் அரிய பொருள் ; பெரிய பொருள் ; கொடுப்பவன் இறைவன் ; பெற்றுக் கொள்பவர் இராமலிங்கர் ; எனவே பொருள் பற்றி ; அதன் பெருமைபற்றிச் சில செய்திகளாவது சொல்லப்படுவது தானே நியாயம் ; நூறு பாடல்களும் நூறு காட்சிகள் எனக் கொண்டால், நூறு காட்சிகளிலும் "அந்தப் பொருள்" பற்றிய சிறப்புக்கள் சொல்லப்படுகின்றன. கொடுப்பவன் இறைவன் என்பதாலும், பெற்றுக்

கொள்பவர் இராமலிங்கர் என்பதாலும், கொடுக்கப்படுவது ஓர் பெரிய பொருள் என்பதாலும் நாடகச்சுவை கருதிப் பொருள் பற்றிய செய்திகள் வெகு கவனமாகவே இடம் பெறுகின்றன.

"கையில் ஒன்று கொடுத்தாய்" என்று தான் முதலாவது பாடல் குறிப்பிடுகிறது. "என்னை வரவழைத்து, மகனே, வருந்தாதே, இங்கு இதனை வாங்கிக்கொள்" என்று நான்காவது பாடல் அமைகிறது. "கையில் ஒன்று கொடுத்து", "கைதனிலே தூய ஒன்றை அளித்து"; "கதவு திறப்பித்து எனது கையில் ஒன்று கொடுத்து" ; "அரிய பொருள் ஒன்று எனது கையில் அளித்து" ; "என் செங்கையில் ஒன்று அளித்து" ; "உய்வகை ஒன்று எனது கரத்து உவந்து அளித்து..." ; "புலையேன் கையிடத்து ஒன்று பொருந்த வைத்து..."; "நகைமுகம் செய்து என் கரத்து நல்கினை ஒன்று" ; – என்றவாறு சொல்லிச் செல்லும் இராமலிங்கர், தொடர்ந்து இறைவன் அளித்த பொருளுக்கு மேற்கொள்ளும் அடைமொழிகள் கவனிப்பதற்கு உரியன. ஒரு படைப்பு, உரைநடையாக இருந்தாலும், கவிதையாக இருந்தாலும் பொருள் புலப்பாடு கருதிப் படைப்பாளன் மேற்கொள்ளும் அடை மொழிகள் முக்கியமான இடத்தைப் பெறுகின்றன. அவ்வகையில் வினைச் சொற்களுக்கு அமைக்கப்படும் "வினை அடைகளும்", பெயர்ச் சொற்களுக்கு அமைக்கப்படும் "பெயர் அடைகளும்" கூர்ந்து கவனிப்பதற்கு உரியன ஆகும்.

பொருள் புலப்பாடு, தெளிவுப்பாடு கருதி மகாகவி பாரதி பயன்படுத்திய, கவனத்தை ஈர்த்த, பெயர் அடை ஒன்றை இங்கே நினைவு படுத்தலாம். "ஆனந்த சுதந்திரம்" என்பது மகாகவி பயன்படுத்திய சொற்றொடர். "ஆனந்த" என்ற அடைச் சொல் இன்றளவும் மிக விரிவாக ஆராயப்படுவதை நாம் இங்கே ஒரு சான்றாக நினைவு கொள்ளலாம். பெயர் அடையும், வினை அடையும் இல்லாமல் வாக்கியம் மேல்நடை கொள்ளாது ; ஒரு வாக்கியம் மேல்நடை கொள்ளவும் பொருளைப் புலப்படுத்தித் தெளிவுபடுத்தவும் பெயர் அடையும் வினை அடையும் மிகவும் இன்றியமையாதன ஆகும்

என்பது மொழிவல்லார் வலியுறுத்தும் ஓர் அருமையான இலக்கணக் குறிப்பு. இறைவன் கொடுத்து, இராமலிங்கர் வாங்கிக் கொண்ட அந்த அபூர்வப் பொருளை விளக்கிக்காட்ட அருமைக்கு அருமையான பெயரடைச் சொற்கள் இடம் பெறுகின்றன. சிலவற்றை இங்கு நினைவு கூரலாம்.

"அரிய பொருள்" ; "களங்கமிலா ஒன்று" ; "நற்பொருள்", "தேவருக்கும் அரிது இது" ; "நற்றவருக்கும் அரிது" ; "பொருள் நிறையும் இது" ; "தெருள் விளங்கும் ஒரு பொருள்" ; "வம்பருக்கும் பெறல் அரிதாம் ஒரு பொருள்" ; "வானினொடு விளங்கு பொருள்", "ஆனதொரு பொருள்" ; "தக்கது ஒன்று" ; என்றெல்லாம் பெயரடை கொடுத்து விளக்கிச் சொல்லும் இராமலிங்கர் கொடுத்தது இன்னபொருள்தான் என்று தெளிவுபடச் சுட்டிச் சொல்லவில்லை.

திருஅருட்பா – நான்காம் திருமுறை "அருட்பிரகாச மாலை" நூறு பாடல்களின் இலக்கிய நுட்ப அழகு இறைவன் – வள்ளலாருக்கு என்னதான் கொடுத்தான் ? என்ற வினாவை நமக்குள் எழுப்புகிறது. இரவோடு இரவாக நடந்து வந்து, கதவம் தட்டி, திறக்கச் செய்து, தனது தலைவியைச் சந்தித்த இந்தத் தலைவன் "ஏதோ ஓர் அரிய பொருள்" கொடுத்துவிட்டு மறைந்து போகிறான்.

நூறுபாடல்களையும் படித்து முடிக்கும்போது நமக்குள் எழும் கேள்வி அந்த இறைவன், காதல் தலைவன் அப்படி என்னதான் கொடுத்தான்? என்பதே, "இதுதான் கொடுத்தேன்" என்று வெளிப்படையாகச் சொல்லாத இறைவன் சதுரனா ? அல்லது இது தான் வாங்கினேன் என்று வெளிப்படையாகச் சொல்லாத தலைவியாகிய இராமலிங்கர் சதுரனா? இவ்விருவருள் யார்கொல் சதுரர்?

இந்தக் காதல் நாடகத்தில் என்ன கொடுக்கப்பட்டது என்று வாசகராகிய நாம் கண்டு பிடித்துவிட்டால், ஊகித்து அறிந்து விட்டால் நாம்தான் சதுரர் ; மறைத்து, மறைத்துப் பேசிய இறைவனும் 'சதுரர்' இல்லை ; வாங்கிக் கொண்டு இன்னது என்று சொல்லாத இராமலிங்கரும் சதுரர் இல்லை. 'யார் கொலோ சதுரர்' என்ற

கேள்விக்கு விடை வாசகராகிய நாம்தான் சதுரர் என்பது தான்.

என்னதான் கொடுக்கப்பட்டது? என்பதற்கு 'அருட்பிரகாசமாலை'யின் நூறாவது பாட்டு ஒரு சிறிய அடையாளம் காட்டுகிறது. "மகிழ்ந்து, இன்னும் நெடுங்காலம், புலவர் தொழ வாழ்க என்றாய்" என்ற இடம் நமக்குச் சிறிது வெளிச்சம் காட்டுகிறது. "எனது தடங்கையில் கொடுத்து, மரணமற்று வாழ்க எனத் திருவார்த்தை அளித்தாய்" என்று வரும் பதினைந்தாம் பாடலின் அடிகள் மேலும் நமக்கு அடையாளம் காட்டுகின்றன எனக் கொள்ளலாம்.

"மரணமிலாப் பெருவாழ்வு" என்ற முழக்கம் அருட்பாவின் முதன்மை முழக்கம் ! முழுமுழக்கம். இரவில் வந்த இறைவன் இராமலிங்கரின் கரங்களில் வைத்துச்சென்றது "மரணமிலாப் பெருவாழ்வு" என்ற பெரிய பொருள் என்று நாம் கண்டு கொள்ளலாம்.

கொடுத்தவனும் இன்னதென்று சொல்லாத நிலையில், கொண்டவரும் இன்னதென்று, வெளிப்படுத்தாத நிலையில் "இன்ன பொருள்தான் கொடுக்கப்பட்டது" என்று கண்டுணர்ந்த வாசகராகிய நாம்தான் சதுரர் ! "யார் கொலோ சதுரர்?" என்ற இலக்கிய விளையாட்டில் நாம்தான் சதுரர் !

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

### பலகை இட்டது

சோமசுந்தரப்பெருமானின் முன்னிலையில் முன்பு முப்பொழுது சென்று தெய்வத்தமிழ் பாடிவந்த பாணபத்திரன் சேரமான் பெருமாளிடம் பெரும் பொருள் பெற்று வந்த பின்பு அர்த்த ஜாமத்திலும் சென்று வணங்கி ஏழிசை பாடி வரும் நியமம் மேற்கொண்டான். நியமம் தவறாத திருத்தொண்டன் பாணபத்திரன் என்பதை உலகுக்குக் காட்டத் திருவுள்ளம் கொண்டார் சோமசுந்தரப் பெருமான். எவ்வித இன்னலையும் கடந்து தனது இசைத் தொண்டைச் செய்ய வல்லவன் என்பதை நிரூபிக்க விரும்பினார் சொக்கேசர். ஆதலால் ஓர் இரவு

இறைவன் திருவிளையாடலினால் எங்கும் கார்மேகங்கள் சூழ்ந்துகொண்டு இடித்து முழங்கி மின் வெட்டின. பெரிய மழை தாரை தாரையாகப் பொழிந்தது. அந்த மாமழையிலே நனைந்து கொண்டே திருக்கோவிலை அடைந்தான் பாணபத்திரன். சோமசுந்தரக் கடவுளைப் பணிந்து நின்றான்.

பின்னர் நந்திகேசுவரருக்குப் பின்னால் சென்று யாழ் வாசித்துப்பாட விரும்பினான். மழையிலே நன்றாக நனைந்து விட்டதால் யாழ் நரம்பு இசை மழுங்கியது. உடம்பும் மழைப்பொழிவிலே நனைந்து விட்டதால் நடுக்கமுற்றது; அதனால் குரல் நடுங்கியது; விரல்கள் வலியெடுத்தன. சேற்றிலே புதைந்த கால்கள் விறைத்தன. இருந்தபோதிலும் செந்தமிழ் கனிந்த அமுத கீதப் பாடல்களைப் பாடிப் பெருமானுக்கு இசைத் தொண்டு செய்தான்.

பாணபத்திரனது நல்லிசைத் தொண்டை நன்குணர்ந்தே சோமசுந்தரப் பெருமான் அருள் கூர்ந்து; பாணபத்திரா! இந்தப் பலகை உனக்கே உரிமையாவது! இதன்மேலே நின்று இசை பாடுக என்று ஆகாசவாணியாகி இயம்பினார். உடனே பாணபத்திரன் அருகிலே நவரத்தினங்கள் இழைத்த பொன்னாலான பலகை ஒன்று தோன்றியது. பெருமானது ஆணையை மறுக்க அஞ்சிய பாணபத்திரனும் அந்தப்பொற் பலகையின் மீதேறி நின்று கொண்டு இசையமுதம் பொழிந்தான்.

பின்னர் சோமசுந்தரப் பெருமான் திருவடிகளை அகத்தே கொண்ட கலைஞன் பொன்மணிப் பலகையைத்தன் கையிலே பக்தியுடன் எடுத்துக்கொண்டு வீடு சென்றான். வீடு திரும்பியபோது மழையும் நின்று விட்டது. இல்லத்திலே பாணபத்திரன் நன்கு நித்திரை செய்தான்.

மறுநாள் பொழுது விடிந்தது. சோமசுந்தரப் பெருமான் பாணபத்திரனுக்கு நவரத்னம் பதித்த பொற்பலகை அருட் கொடையாகத் தந்ததைக் கேட்டறிந்தான் வரகுண பாண்டியன்,

பாணபத்திரனைப் பரிவுடன் அழைத்து வந்து அப் பொற்பலகையின் மீது இருக்கச் செய்தான். எங்கள் மதுரைநாயகன் இவனே என்றுகருதிப் பொன்னும் மணியும், கலன்களும் அளித்தான்; நன்செய்களையும் பெரு நிதியங்களையும் நிரம்பக் கொடுத்து முறையாகப் பன்னாட்கள் நடத்தி வந்தான்.

பாண்டியன் வரகுணன் கொடுத்த பரிசில் வரிசைகளை ஏற்ற பாணபத்திரனும் தேவாலயத்திற்கு நாள் தோறும் நான்கு ஜாமங்களிலும் சென்று சோமசுந்தரப் பெருமானுக்கு இசை வழிபாடு செய்து வந்தான்.

சில நாட்கள் கழித்துப் பாண்டியன் வரகுணன் சாரூப்யம் பெற்றுச் சிவலோகம் சேர்ந்தான்.

*(தொடரும்...)*

---



**திருநெல்லை ஆன்மிகத் திங்களிதழில்**
**இடம் பெறுவதற்கு**
**அன்பர்களிடமிருந்தும் ஆன்றோர்களிடமிருந்தும்**
**கட்டுரை, கவிதை, சிறுகதை ஆகிய**
**படைப்புகள் வரவேற்கப் படுகின்றன.**

---

# எல்லாரும் ஏங்கு தம்மா!

**(ம. கார்மேகம்)**

அன்பினால் அனைவர் மாட்டும்
அணுக்கமாய் வாழ்ந்த அய்க்கண்
பண்பினால் உயர்ந்த மேலோர்
படைப்பினில் உயரம் தொட்டார்
மன்பதை புகழும் மேதை
மட்டற்ற பாசம் மிக்கார்
துன்பங்கள் எமக்குத் தந்தே
தொடர்வற்று மறைந்து விட்டார்!

அறவழிக் கதைகள் தந்த
ஆற்றல்சால் எழுத்து வேந்தர்
உறவினைப் பேணிப் போற்றும்
உயர்குணம் நிறையப் பெற்றார்;
பெறத்தகும் பெருமை எல்லாம்
பெற்றவர்; இளையோர் தம்மைச்
சிறந்திடும் படைப்பின் ஆற்றல்
சேர்ந்திடச் செய்த ஆசான்;

நல்லுள்ளம் கொண்ட மக்கள்
நலம்மிக்க தம்பி மார்கள்
சொல்லும் சொல் மாறாச் சுற்றம்
தொண்டுள்ளம் கொண்ட சான்றோர்
வல்லராய் எழுதும் பல்லோர்
மனதிலே போற்றும் நல்லோர்
உள்ளங்கள் கலங்கி நிற்க
உயிர்விட்டு மறைந்தார் அய்க்கண்!

நானிலம் போற்ற இங்கே
    நற்கதை தந்த நம்பி
மேனிலம் சென்று விட்டார்!
    வேதனை சூழ நின்றோம்!
வானிங்கு வாழும் காலம்
    மறையாத புகழைக் கொண்டார்!
வானவர் விருந்தாய் ஆனார்
    வையகம் போற்றும் அய்க்கண்!

எழுதுதல் ஒன்றே வாழ்வின்
    ஏற்றமாய் எண்ணி வாழ்ந்தார்
பழுதிலா எண்ணம் கொண்டார்;
    படைப்பாளன் உயர்வு வேண்டி
விழுதாகத் தாங்கிக் கொண்டார்
    வேராக நின்று காத்தார்
அழுதாலும் தீர வில்லை
    அவரில்லை என்னும் துக்கம்!

புத்தகக் காட்சி தந்தார்
    புதிதாகக் கம்பன் மேடை
வித்தகம் பெருகச் செய்தார்
    மேலான மடங்கள் போற்றும்
உத்தமர்; ஓய்வில் லாமல்
    உழைத்தவர் ஓய்ந்து விட்டார்;
எத்தனை விருது பெற்றார்!
    எல்லாமும் ஏங்கு தம்மா!

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் “திருநெல்லை”**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்